ஏற்பாடு செய்திருக்கிறோம். இவ்வாறு கணக்குத் தீர்ப்பதை மத்திய ஸ்டோர்ஸ்-ம் கூட்டுறவு மத்திய ஸொஸைடியும் ஏற்றுக்கொள்ளவேண்டும். அதற்கு அவைகள் இன்னும் கூட்டங்கள் கூடி முடிவு செய்யவில்லை. விஷயம் இவ்வளவுதான். எனவே, அந்த ஸ்தாபனத்திற்கு ஏராளமாக நஷ்டம் வந்து விட்டதாகக் கருதக்கூடாது என்று சொல்லிக்கொள்கிறேன்.

*258 *Q.*—Sri A. V. P. ASAITHAMBI (on behalf of Sri P. U. Shanmugam) : கனம் கைத்தொழில் அமைச்சர் அவர்கள் தயவு செய்து பதிலளிப்பாரா—

(அ) கோயமுத்தூர் மத்திய கூட்டுறவு கிடங்கினின்று இலங்கைக்கு மிளகாய் ஏற்றுமதி சம்மந்தமாக சர்க்காருக்கு புகார் வந்ததுண்டா ?

(ஆ) சர்க்கார் அதன் பேரில் எடுத்துள்ள நடவடிக்கை என்ன ?

The Hon. Sri R. VENKATARAMAN : (*a*) Yes, Sir.

(*b*) The matter is under investigation.

Sri S. M. ANNAMALAI : மிளகாயின் விலை நாளுக்குநாள் ஏறிக்கொண்டே போவதால், வேறு நாடுகளுக்கு மிளகாய் ஏற்றுமதி யாவதைத் தடைசெய்ய சர்க்காருக்கு உத்தேசம் உண்டா ?

The Hon. Sri R. VENKATARAMAN : இப்போது, வெளிநாடுகளுக்கு நாம் எவ்வளவுக் கெவ்வளவு சாமான்களை ஏற்றுமதி செய்கிறோமோ அவ்வளவுக்கு அவ்வளவு நமது நாட்டுத் திட்டங்களைப் பூர்த்தி செய்வதற்கான வசதிகள் நமக்கு அதிகம் ஏற்படும். அவ்வாறு நாம் நினைக்கும்போது, மிளகாய் ஏற்றுமதியை—அதுவும், அது நன்ருக விர்டனையாக விவசாயிக்கு நல்ல பணம் கிடைக்கக்கூடிய நிலைமை இருக்கும்போது—தடுப்பதற்கு கனம் அங்கத்தினர் யோசனை கூறுவது அவ்வளவு பொருத்தமாகத் தென்படவில்லை.

Sri T. T. DANIEL : May I know from the Hon. the Minister the nature of the complaint ?

The Hon. Sri R. VENKATARAMAN : Here there is no complaint. But in the other case, there was a complaint about the quantity. கோயம்புத்தூர் சங்கத்தில், அவர்கள் ப்ரைமரி ஸொஸைடியிலிருந்து வாங்கவில்லை என்ற புகார் இருக்கிறதே தவிர, தரத்தை (க்வாலிடியை) பற்றிய புகார் இல்லை.

*Agricultural Colleges*

*259 *Q.*—Sri P. G. MANICKAM : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) the places in which Agricultural Colleges are located in Madras State;

(*b*) how many candidates studied in these institutions during the years 1957 and 1958; and

(*c*) how many of them were Harijans?

The Hon. Sri M. BHAKTAVATSALAM : (*a*) There is only one Agricultural College in the State at present and it is located at Coimbatore.

(*b*) The total number of students who studied in 1957 and 1958 in all the three B.Sc. (Ag.) degree classes was 364 and 393, respectively.

17th September 1958]

(c) The total number of Harijan students who studied in 1957 and 1958 in all the three B.Sc. (Ag.) degree classes was 7 and 8, respectively.

SRI P. G. MANICKAM : இப்போது குறிப்பிடப்பட்ட வருஷங்களில் இப்பயிற்சிக்காக எத்தனை ஹரிஜன மாணவர்கள் விண்ணப்பித்துக் கொண்டார்கள் ? அவர்களில் எத்தனை பேர்கள் பயிற்சிக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள் ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அதுபற்றிய விவரங்கள் என்னிடம் இப்போது இல்லை.

SRI K. VINAYAKAM : Since there is an unprecedented rush of students to such technical institutions, will the Government consider the possibility of having one or two more colleges? If that cannot be done immediately, will they at least increase the number of seats in the existing College at Coimbatore?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : The strength of the College has been increased to 162. The Annamalai University has also started an agricultural course quite recently.

SRI T. R. RAMAMIRTHA THONDAMAN : ஆடுதுறையில் ஒரு விவசாயப் பண்ணை நன்றாக நடந்துவருகிறது. மேலும், அங்கே கிராம சேவக்குகளுக்கு விவசாயப் பயிற்சி அளிக்கப்படுகிறது. அங்கே ஒரு விவசாயக் கல்லூரியை அமைக்க போதுமான வசதி இருப்பதால், அங்கே ஒரு விவசாயக் கல்லூரியை அமைக்க வேண்டுமென்று கோரிக்கை வற்புறுத்தப்பட்டதா ? அங்கே ஒரு விவசாயக் கல்லூரியை நிறுவ சர்க்காருக்கு உத்தேசம் உண்டா ? அப்படியானால் கல்லூரி அங்கே எப்போது நிறுவப்படும் ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அம்மாதிரி யோசனை கூறப்பட்டது. ஆனால், சிதம்பரத்திலுள்ள அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் இப்போது ஒரு விவசாயக் கல்லூரி துவக்கப்பட்டிருப்பதால் அந்த யோசனையை அரசாங்கம் ஏற்றுக்கொள்வதற்கில்லை.

SRI N. MARUDACHALAM : விவசாயக் கல்லூரியில் பயின்று வரும் மாணவர்கள், உரிய காலங்களில் தங்களுக்கு ஸ்காலர்ஷிப் பணம் கிடைக்கவில்லை என்று சர்க்காருக்கு புகார் செய்திருக்கிறார்களா ? சர்க்காருக்கு அவ்வாறு கடிதம் அனுப்பித்திருக்கிறார்களா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அதுபற்றி என்னிடம் தகவல் இல்லை.

SRIMATHI T. N. ANANDANAYAKI : இந்த ராஜ்யத்திலுள்ள விவசாயக் கல்லூரியில் இப்போது எத்தனை பெண்கள் படிக்கிறார்கள் ? பெண்கள் அக்கல்லூரிக்கு விண்ணப்பம் போட்டு சேர்க்கப்படவில்லையா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அக்கல்லூரிக்கு தகுதியுடைய பெண்கள் விண்ணப்பம் போட்டிருந்தால் சேர்த்துக்கொள்ளப்பட்டிருப்பார்கள். பெண்கள் அக்கல்லூரியில் சேருவதற்குத் தடை இல்லை. அந்தக் கல்லூரியில் இப்போது சில பெண்கள் படிக்கிறார்கள். ஆனால் எத்தனை பெண்கள் படிக்கிறார்கள் என்ற விவரம் என்னிடம் இப்போது இல்லை.

*Trade Disputes*

* 260 Q.—SRI M. JAGANNATHAN : Will the Hon. the Minister for Industries be pleased to state—

(a) the number of trade disputes reported to Government for adjudication in 1957–58; and